# 58. ரெட்டைப் பிள்ளையார்

எனக்கு ஆராய்ச்சிகள், ஆராய்ச்சிக்காரர்கள் என்றாலே எப்போதும் பயந்தான். ஆனாலும் நான் சிலசமயம் ஆராய்ச்சிகளில் ஈடுபட்டு விடுவதும் உண்டு. அந்த மாதிரி சமயங்களில் என் ஆராய்ச்சிகள் வெறும் ஆகாசக் கோட்டைகளாகவும், பந்தல்களாகவும் முடிந்துவிடும். அதுவும் பொழுதுபோக்குக்கு ஒரு வழிதானே?

மனிதன் எதற்காக உயிர் வாழ்கிறான்? தஞ்சாவூரில் அந்த நாட்களில் பரமேசுவரய்யர் ஹோட்டலில் ரவா தோசையும் சாம்பாரும் காபியும் சாப்பிட்டுப் பழக்கப்பட்டவர்கள் அப்படிச் சாப்பிடுவதற்காகத்தான் உயிர்வாழ வேண்டும் என்று சொல்லலாம். அதேபோல ஒவ்வொரு ஊரிலும் ஒவ்வொரு காலத்தில் ஒரு விசேஷம் மனிதர்கள் உயிர் வாழ்வுக்கு ஆதாரமாக அமைகிறது என்று சொல்லுகிறோம். மதுரை என்றால் எனக்குப் பாண்டியர்கள் பெருமை, பழந்தமிழ் வளர்ந்த ஊர், சங்கம் கூடிய இடம், திருவிளையாடல் ஸ்தலம் என்றெல்லாம் ஞாபகம் வருவதில்லை, மதுரையில் தான் அந்த நாட்களில் காலணா இட்லி இயக்கம் தொடங்கியது என்று நான் கேள்விப் பட்டிருக்கிறேன்.

ரெயில் விட்டு இறங்கியவுடனேயே பாப்பா கேட்டாள், "இது மதுரை தானே?" என்று.

"ஆமாம்" என்றேன்.

"கண்ணகி எரித்த ஊரை மறுபடியும் ரெயில்வே ஸ்டேஷன் உள்படக் கட்டிவிட்டார்களா?" என்று கேட்டாள் பாப்பா.

"அப்பவே கட்டிவிட்டார்கள்" என்று சொல்வதைத் தவிர எனக்கு வேறு ஒரு பதிலும் தோன்றவில்லை.

ஆனால் மதுரையில் பத்து நாள் இருந்த பிறகு "கட்டத்தான் கட்டினார்களே, ரெயில்வே ஸ்டேஷன் உள்பட. இன்னும் கொஞ்சம் நன்றாகத்தான் கட்டியிருக்கக்கூடாதா?" என்று என்னையே கேட்டுக் கொண்டேன். கண்ணகி ஊரை எரித்த போது மதுரையில் ஜனத்தொகை என்ன என்று, மற்ற விவரங்களையெல்லாம்

இவ்வளவு சரிவரக் கற்ற இளங்கோ அடிகள் தரவில்லை. அவர் நாட்களில் ஜனங்களை ஒன்றிரண்டு மூன்று என்று எண்ணுவது வழக்கமில்லையோ என்னவோ? அப்படி எண்ணுவது பாபம் என்று கூட அவர் காலத்தவர் எண்ணியிருக்கலாம். அல்லது துறவியாதலால் இளங்கோவடிகள் காதலைப்பற்றித்தான் காவியம் இயற்றினார் என்றாலும், ஜனத்தொகை அதிகரிப்பு, குறைப்பு இரண்டையும் பற்றிப் பக்ஷபாதமற்ற மனப்பான்மை கொண்டவராக இருந்திருக்கலாம். அது எப்படியானாலும் இப்போதைய ஜனத் தொகைக்கு மதுரை நகரம் போதவில்லை. ஊரில் ஜனங்கள், பாத்திரத்தில் ஜலம் நிரம்பி வழிவது போல, நிரம்பி வழிகிறார்கள்.

என் பிரயாணங்களில் ஒன்று நான் கவனித்திருக்கிறேன். அந்த அளவுக்கு என் பிரயாணங்களில் என் அறிவு விசாலித்திருக்கிறது என்று தான் சொல்ல வேண்டும். ஒவ்வொரு ஊருக்கும் தனித்தனியாக ஒவ்வொரு நாற்றம் வீசுகிறது. தஞ்சாவூருக்கென்று பிரத்தியேகமான ஒரு நாற்றம்; கும்பகோணத்துக்கென்று ஒரு பிரத்தியேகமான நாற்றம்; மன்னர்குடிக்கென்று ஒரு பிரத்தியேக நாற்றம்; திருவட்டீசுவரன் பேட்டைக்கென்று பிரத்தியேகமான நாற்றம்; திருவனந்தபுரத்துக்கென்று ஒரு பிரத்தியேகமான நாற்றம். மதுரைக்கும் தனியாக ஒரு நாற்றம் உண்டென்பதை நான் திருப்பரங்குன்றம் பஸ்ஸில் போய்க் கொண்டிருக்கும் போது உணர்ந்து கொண்டேன். கண்ணைக் கட்டிவிட்டு இந்த இடத்தில் கொண்டு போய் நிறுத்தினால், வாஸனையை மட்டும் கொண்டு இது மதுரை என்று சொல்லிடப் போதிய அளவுக்கு எனக்கு இப்போது மதுரை வாஸனை தெரிந்துவிட்டது. தமிழ்ச்சங்கம் (முதல், இடை, கடை) கண்ணகி, திருவிளையாடல்கள், பாண்டியர்கள், நாயக்கர்கள் எல்லாமாகக் கலந்த வாஸனை. அது ஒரு தரம் அனுபவித்து விட்டால் மறக்க முடியாத வாஸனை.

மிஸ் மேயோ மாதிரி நாற்றங்களை மாத்திரம் கணக்கெடுக்க மதுரைக்கு வரவில்லையே நான். மாரியாத்தாள் கோயில், தெப்பக் குளம், நடுமண்டபத்தில் நாகலிங்கப்பூ, நாயக்கர் மஹால், கல்லும் சுண்ணாம்பும் கருப்பஞ்சாறும் சேர்த்துக் கட்டிய மண்டபம். பிறந்தகத்து பெருமை பேசி உயிர் துறந்த ராணியின் அரண்மனை எல்லாவற்றையும் பார்த்தேன். எல்லா அரண்மனைகளைப் பற்றியும் சொல்கிற கதைகள் ஏன் ஒரே மாதிரியாகவே இருக்கின்றன என்கிற ஆராய்ச்சியில் சிறிது நேரம் இறங்கினேன், சுலபமாகவே பதில் கிடைத்துவிட்டது. மனித சுபாவம் எங்கும் எப்பொழுதும் ஒன்றுதான். அரசர்களும் மற்ற பண்டைய காலத்துப் பெரியவர்களும் இன்றைய சுதந்திர இந்தியாவின் முடிசூடாத மன்னர்களாகிய நம்மைப் போலவேதான். ஏதாவது செய்துவிட்டு அதற்குரிய பலன்களை அனுபவித்துக் கொண்டு அவஸ்தைப்படுபவர்கள் தான் எல்லோரும். பெண்களுக்கோ என்றால் அந்தக் காலத்திலும் சரி, இந்தக் காலத்திலும் சரி பிறந்தகத்துப் பெருமைதான் ஒரே பெருமை.



என் ஆராய்ச்சியில் பாப்பா குறுக்கிட்டாள்; “அவாத்து மனுஷாளைப் பற்றி ஏதாவது பேசாதே அப்பா, ஆபத்து” என்றாள்.

நியாயம்தான் என்று ஆராய்ச்சியை நிறுத்திக் கொண்டேன். ஆனால் கோவிலில் போய், அம்மன் சந்நிதியில் இரண்டு பெண்டாட்டிகள் சகிதம் நிற்கிற நாயக்கர் சிலைக்கு எதிரில் நின்று கொண்டு, பிறந்தவீட்டுப் பெருமையைப் பேசி உயிரைவிட்ட அந்தப் பெண்ணரசி யார் என்று விசாரித்துப் பார்த்தேன். நிச்சயமாகச் சொல்வதற்கு யாரும் அகப்படவில்லை. நானாக அனுமானிக்க முயன்றேன். தஞ்சாவூர்ப் பக்கத்துப் பெண்ணைக் கல்யாணம் செய்து கொண்ட எனக்கு இது சுலபமான காரியமாகவே பட்டது. ஆனாலும் சந்தேகமாகத்தான் இருந்தது.

அழகான சிலைகள் பலவற்றை ஆதர்ச விக்கிரஹங்களாகப் படைத்த அந்தச்சிற்பி இந்தத் தத்ரூப ரியலிஸ்டிக் நாயக்க மன்னன் சிலையையும், அவர் மனைவிமார்களையும் சிருஷ்டித்து நிறுத்த எவ்வளவு கஷ்டப்பட்டிருப்பான் என்று எனக்குத் தோன்றிற்று. ஆதர்சவாதிகளுக்கே ரியலிஸம் சற்றுச் சிரமம் தருகிற விஷயம் என்றுதானே சொல்லவேண்டும்?

“இந்த மீசைக்காரனை என்ன பார்வை சுற்றிச் சுற்றி வந்து?” என்று கேட்டாள் என் மனைவி.

அந்த மீசைக்காரன் ஒரு காலத்தில் மதுரையையும் சுற்றுப் புறத்தையும் திறம்பட ஆண்டவன் என்று அறிந்திருந்தாலும்கூட என் மனைவிக்கு பயபக்தி ஏற்பட்டிராது என்பது நிச்சயம். இன்றைய முனிசிபல் அதிகாரிக்குக்கூட, மாதக் கூலி வாங்கும் ஜில்லாகோர்ட் டவாலிக்கும் கூட,அந்த நாயக்க மன்னனை விட அதிகமாக அதிகாரம் இருக்கிறது என்பது என் மனைவியின் கொள்கை. உலகத்தாரில் மற்றவர்களைப் போலத்தான் அவள். எனக்கு எதிர்காலத்தில் தான் நம்பிக்கை, நாளைக்குத் தபால்காரன் என்ன கொண்டுவருவான் என்று எதிர்பார்த்துக் கொண்டு காலங்

கழிப்பவன் நான். பண்டைப் பெருமையும் நாளைய பெருமையும் என் பிராந்தியங்கள். இன்றுள்ளதை அறிபவர்கள் தானே ரியலிஸ்டுகள் - தத்ருபவாதிகள், இன்றுள்ள நிலைமை என்றால், காப்பிக் கொட்டை சர்க்கரை விலைவாசிகள், அளவுச் சாப்பாடு, அளவில்லாத சாப்பாடு, உருளைக்கிழங்கு இங்கு மலிவு என்கிற விஷயங்கள்தானே!

கோயிலைவிட்டு வெளியே வந்தால் ஒரு பிரும்மாண்டமான சைகிள், சைகிள் ரிக்ஷா, கால்நடைக் கொடி ஊர்வலம் போய்க் கொண்டிருந்தது. வரி எதிர்ப்பு ஊர்வலம், இது எங்கேயோ பிரசங்கமாரியில் முடியும் என்று விசாரித்து அறிந்து கொண்டேன். எதற்காவது எங்கேயாவது எதிர்ப்பு என்பது இருந்தால்தான் உயிர் இருப்பதற்கு அடையாளம் என்கிற சித்தாந்தம் உள்ளவன்நான். இந்த ஊர்வலத்தைப் பார்த்ததும் "மதுரையிலும் உயிர் இருக்கிறது, எதிர்காலம் உண்டு" என்று தீர்மானித்துக் கொண்டேன்.

அந்தச்சமயம் பார்த்து பாப்பா கேட்டாள் : "கோயிலில் எங்கே பார்த்தாலும் பெரிசும் சிரிசுமாக ரெட்டைப் பிள்ளையார்கள் கண்ணில் பட்டதே. அது ஏன்அப்பா?" என்றாள்.

எனக்குப் புரியவில்லை. ஆனால் சுவையான விஷயம் ஏதோ என்று தோன்றிற்று. "என்னது?" என்றேன்.

"நானும் ஒரு நூறு கோயில்களுக்குமேல் பார்த்திருக்கிறேன். அதிலெல்லாம் இவ்வளவு பிள்ளையார்கள் கிடையாது" என்றாள் பாப்பா.

பாப்பா அவள் வயதுக்கு அதிகமாகவே கோயில்கள் பார்த்திருக்கிறாள் தான். அவற்றையும் கவனித்தே பார்த்திருக்கிறாள் என்று இப்போது எனக்குத் தெரிந்தது. மதுரைக் கோயிலில் பிள்ளையார்கள், அதுவும் ரெட்டைப் பிள்ளையார்கள் அதிகம் என்றுதான் இப்போது நானும் நினைத்தேன். ஒரு பெரிய பிள்ளையார் - அதன் பக்கத்தில் ஒரு சிறு பிள்ளையார்-மேலே ஒரு நோட்டீசு. "உப்பைக் கொட்டுவதானால் காலடியில் கொட்டுங்கள். பிள்ளையார் தலைமேல் கொட்டாதீர்கள்'" என்று ஒரு அறிக்கை. இப்படி அந்தப் பெரிய கோயிலில் பல இடங்களில் பார்த்ததாக எனக்கும் ஞாபகம் வந்தது.

பள்ளிக்கூடத்தில் படிக்கும்போது ஒரு மயில் இறகில் ஒரு கொழுந்தைப் பிய்த்து நோட்டுப் புத்தகத்தில் வைத்துவிட்டு மறுநாள் அது குட்டிபோட்டது என்று இரண்டு மயில் இறகுகள் காட்டுவது பையன்களிடையே அந்த நாட்களில் வழக்கம். இன்றும் அப்படி உண்டோ இல்லையோ எனக்குத் தெரியாது. அந்தக் காலத்தில் ஒட்டுப் படங்கள், கொறுக்காப்புளிப் பழம், நட்சத்திரப் பூ முதலியனவும் நான் பள்ளிக்கூடத்தில் படிக்கிறபோது வழக்கி லிருந்தன. இப்போது உண்டோ என்னவோ எனக்குத் தெரியாது. காலம் மாறுகிறது. திருமலை நாயக்கன் ஆண்ட காலம் போய்விட்டது. நாயக்கன் மஹால் கட்டினான் - கோபுரங்களைப் பழுது பார்த்தான். இப்போது புது சினிமாக் கொட்டகைகள் கட்டுகிறார்கள் - பழைய சினிமாக் கொட்டகைகளைப் புதுப்பிக் கிறார்கள்.



ரெட்டைப் பிள்ளையார் விஷயத்தைப் பற்றி மறந்து விடாமல் சிந்தித்தேன்-புரியவில்லை. பிள்ளையாரைச் சிந்தித்துக் கொண்டுதான் படுத்தேன். ஆனால் என் தேவையையுணர்ந்து பிள்ளையார் வந்து இரவில் கதை சொல்லவில்லை.

காலடி சென்றுவிட்டு வினோபாஜீயையும் மற்றும் கன்னியா குமரி, சுசீந்திரம் முதலிய இடங்களையெல்லாம் தரிசித்துவிட்டு மதுரை வந்து நாங்கள் தங்கியிருந்த ஹோட்டலிலே பக்கத்து அறையில் தங்கியிருந்த மத்தியப் பிரதேசத்து அம்மணி-தன் பெயர் காந்தா மரேல்கர் என்று சொன்னாள் என்று ஞாபகம்-அவளை நாங்கள் அகஸ்மாத்தாகக் கோயிலிலும் பார்த்தோம். அவள் சொன்னாள் : "எங்கள் பக்கத்தில் விநாயகருக்குத்தான் கல்யாணமாகியிருக்கிறது-சுப்பிரமணியர்தான் பிரம்மச்சாரி" என்று., மதுரையில் பெரிய பிள்ளையார் குட்டிப் பிள்ளையார் என்று ரெட்டைப் பிள்ளையார் விஷயத்துக்கும் இந்தச் செய்திக்கும் முடிச்சுப்போடப் பார்த்தேன். கதாசிரியனாகிய என்னால்கூட முடியவில்லை. ஆனால் எனக்குக் காதலைப் பற்றிய கற்பனைகள் கூட அவ்வளவு சுலபமாக வந்து விடுவதில்லை. இதைப்பற்றி, கல்லுப் பிள்ளையாரைப் பற்றிக் கற்பனை எப்படி வரும்.

மறுநாள் காலை தமிழ்ப்பத்திரிகையில் சென்னைக்கு வந்திருந்த இன்புளுயன்ஸா நோய் எங்களைப் போலவே மதுரைக்கும் விருந்தாளியாக வந்துவிட்டது என்று செய்தி வந்திருந்தது. அடுத்து வந்திருந்த செய்தி என் கருத்தைக் கவர்ந்தது.

"இன்று நகர தபாலாபீஸில் வேலை செய்யும் 80 தபால்காரர்

களில் 35 பேர்கள் திடீரென இன்புளுயன்ஸா நோய் கண்டிருப்பதாகத் தெரிவித்ததால்இன்று நகரில் தபால் பட்டுவாடா செய்வது மிகவும் பாதிக்கப்பட்டது" என்று வந்திருந்த செய்தி என்னை மிகவும் பாதித்தது என்றுதான் சொல்லவேண்டும். தபாலை நம்பிக்கொண்டு உட்கார்ந்திருப்பவன் நான். வெறும் வாயையே மெல்லுபவன். அவலும் அகப்பட்டது; போட்டு மென்றேன்.

தபாலாபீஸில் பாதிப்பேருக்கு ஜுரம், ஆனால் ஊரிலுள்ள கடை கண்ணிகள், ஹோட்டல்கள் முதலிய சகல ஸ்தாபனங்களும் சரிவரத்தான் வேல செய்கின்றன. தபால் பட்டுவாடாதான் பத்திரிகையில் இன்புளுயன்ஸா செய்தி வந்தவுடனேயே பாதிக்கப் பட்டு விடுகிறது. இது ஏன் என்று ஆராய்ச்சியில் ஈடுபட்டேன். இதுதான் சுதந்திரத்தின் உரிமை என்று கண்டுபிடிக்க அதிக நேரம் பிடிக்கவில்லை. சர்க்கார் பொது ஸ்தாபனங்கள் மிகவும் பலஹீனமான ஸ்தாபனங்கள்; அவர்களை இன்புளுயன்ஸா போன்ற தொத்து வியாதிகள் பீடிப்பது மிக மிகச் சுலபம்என்று முடிவுக்கு வந்தேன்.

இடையில் ஏற்பட்ட ஒரு பிரச்னை கூடத் தீர்ந்துவிட்டது. ரெட்டைப் பிள்ளையார் பிரச்னைதான் கிளம்பிப் பதினெட்டு மணி நேரமாகியும், ஒரு தூக்கம் தூங்கிக் கனவு காணச் சந்தர்ப்பம் தந்தும்கூடத் தீரவில்லை.

அன்று மாலை மறுபடியும் - வேறு என்ன செய்வது - மீனாக்ஷி கோயிலுக்குத்தான் போனோம். அங்குபோகும்போது நாலைந்து பள்ளிக்கூடத்துப் பையன்கள் கையில் பையும் புஸ்தகமும் மைக்கூடுமாகக் கிளிக்கூண்டண்டைக் கூச்சல் போட்டுக் கொண்டிருந் தார்கள். நான், பொற்றாமரைக் குளத்தில்தான் ஜலம் இல்லையே, ஒரு பலகையைப் போட்டுக் கொண்டு உட்கார்ந்து தமிழ்த் தவம் புரிந்தால் என்ன என்று சிந்தித்துக் கொண்டே கிளிக்கூண்டுப் பக்கம் வந்தேன். பையன்கள் கூக்குரலில் எதுவும் எனக்குச் சரியாகக் காதில் விழவில்லை.

பாப்பா தான் சொன்னாள்: 'பையன்கள் பள்ளிக்கூடத்தில் பரீக்ஷை எழுதிவிட்டு வந்திருக்கிறார்கள். கிளியை பாஸா பெயிலா என்று கேட்கிறார்கள்' என்று.

நானும் கவனித்தேன். ஒரு கிளி அழுத்தம் திருத்தமாக "பெயில், பெயில், பெயில்" என்று மூன்று தரம் கூறிற்று அந்தப் பையனின் தொங்கிப்போன முகத்தைப் பார்த்தேன். கெட்டிக்காரன் என்று களைசொட்டிற்று. பையன் பெயில்தான் ஆவான் இன்றையப் பள்ளிகளிலே என்று தீர்மானித்துக் கொண்டேன்.



அதே சமயம் தோன்றிற்று எனக்கு-ரெட்டைப் பிள்ளையாரைப் பற்றி இந்தக் கிளியைக் கேட்டால் என்ன என்று, கடைசிப் பையன் "மீனாக்ஷி, பாஸா, பெயிலா?" என்று கிளியைக் கேட்டுவிட்டுப் போகும் வரையில் காத்திருந்து விட்டு, கிளிக்கூண்டை அணுகி, "இந்த ரெட்டைப் பிள்ளையார் விஷயம் என்ன மீனாக்ஷி!" என்று ஒரு கிளியைப் பார்த்துக் கேட்டேன். அந்தக் கிளி பதில் சொல்ல வில்லை. ஆனால் கூண்டிலிருந்த கிளிகளில் ஒரு ஏழெட்டு போட்டி போட்டுக் கொண்டு எனக்குப் பதில் அளித்தன. விஷயமும் தெளிவாயிற்று.

அந்தக் காலத்தில் - அதாவது திருமலை நாயக்கன் காலத்துக்கு ஒரு நூற்றாண்டு முந்தி-தமிழ் நாட்டிலிருந்து பிள்ளையாரை அகற்றி விடுவது என்று ஒரு இயக்கம் நடந்தது. கண்ட இடங்களில் உடைத்து விக்கிரகங்களைத் தூளாக்கி விடுவது என்று பலர் தோன்றினார்கள். இதற்கு அந்தக் காலத்து அரசாங்கமும் ஒக்குமத்து என்று சொன்னார்கள். ஒரே பொழுதில் கோயிலில் புகுந்து ஒரு நூற்றியெட்டுப் பிள்ளையார்களை உடைத்து விடுவது என்று சதி நடந்தது. பிள்ளையார்களை உடைத்தார்கள்-அதாவது பிள்ளையார் களின் தலையில் தடிகொண்டு தாக்கினார்கள். ஆனால் பிள்ளையார் கள் உடையபடவில்லை; ஒவ்வொரு பிள்ளையாருக்குப் பக்கத்திலும் இன்னொரு குட்டிப் பிள்ளையார் தானாகத் தோன்றிவிட்டது.

கிளிகள் போட்ட கூச்சலில் எனக்குப் புரிந்தது இவ்வளவுதான். அதற்குள் பள்ளிக்கூடத்துப் பெண்கள் ஒரு பத்துப் பேர் வந்துவிடவே கிளிகள் என்னை லக்ஷியம் செய்து பேச மறுத்துவிட்டன.

நானும் எண்ணிப் பார்த்தேன். சரியாக நூற்றியெட்டு ரெட்டைப் பிள்ளையார்கள் தான் இருந்தன! ஒன்றிரண்டு கூடக் குறைவாக இருந்தால்தான் என்ன?

சரஸ்வதி
ஜுன் 1958